ஆதிசங்கரர் அருளிய

# ஆறுமுக அரவம்

(சுப்ரமண்ய புஜங்கம்)

தமிழில் : பத்மன்



# ஆதிசங்கரர் அருளிய

# ஆறுமுக அரவம்

# (சுப்ரமண்ய புஜங்கம்)

## தமிழில் : பத்மன்

பிரும்ம சூத்திரத்துக்கும், பகவத் கீதைக்கும் விளக்கவுரை (பாஷ்யம்) எழுதி, அத்வைத தத்துவத்தை மீண்டும் நிலைநாட்டி, சனாதன ஹிந்து தர்மத்துக்கு புத்துயிர் ஊட்டியவர் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர். கேரள மாநிலம் காலடியில் பிறந்த ஸ்ரீ ஆதிசங்கரர், தாம் காலடி எடுத்து வைக்காத பாரதப் பகுதியே இல்லை என்ற அளவுக்கு நாடு முழுவதும் சுற்றுப் பயணம் செய்து, அக்காலத்தில் நசிந்துவந்த் ஹிந்து மதத்தை தம் மேதா விலாசத்தால் மேன்மையோங்கச் செய்தவர். சனாதன தர்மத்தைப் பின்பற்றியவர்களை ஐக்கியப்படுத்தும் வகையில் ஷண்மத ஸ்தாபனம் செய்த அவர், கௌமாரத்தின் நாயகனான ஷண்முகன் மீதும் குன்றாத பக்தி கொண்டவர். மனக்குகையில் ஞானக்கடலாக வீற்றிருக்கும் அந்த சுப்ரமண்யப் பெருமானை, திருச்செந்தூர் கடல் தீரத்திலே கந்தமாதனபர்வத குகை ஓரத்திலே வணங்கி சுப்ரமண்ய புஜங்கம் என்ற இந்தப் பாமாலையைச் சூட்டினார் ஸ்ரீ ஆதிசங்கரர். புஜங்கம் என்றால் பாம்பு என்று பொருள். சம்ஸ்கிருதத்தில் செய்யுட்களைப் புனையும் ஓசைநயங்களில் (ஸ்வரங்களில்) புஜங்கமும் ஒன்று. அதற்கேற்ப, சுப்ரமண்ய புஜங்கம் பாடல் முழுவதுமே, ஓர் அரவம் (பாம்பு) வளைந்து நெளிந்து சரசரவெனச் செல்வதைப் போன்ற அரவம் (ஓசை) கொண்டது. மேலும், பாம்பு என்பது குண்டலினி சக்தியின் உருவகம். சுப்ரமண்யனோ, தனது அன்பர்களின் குண்டலினி சக்தியை மேலோங்கச் செய்யும் யோகீஸ்வரன். அதேநேரத்தில் புஜ + அங்கம் என்பதால் புஜங்கம் என்றும் ஒருசிலர் பொருள் கூறுவர். அதன்படி, ஸ்கந்தனின் கந்தங்களில் (தோள்களில்) சூடப்பட்ட பெருமை கொண்டது என்றும் இந்தப் பாமாலையைக் குறிப்பிடலாம்.

திருச்செந்தூரில் ஸ்ரீ ஆதிசங்கரர் ஆசுகவியாய் இந்தப் பாடலைப் பாடியபோதே, அவருக்கு சுப்ரமண்யக் கடவுள் பிரத்யட்சமானார் என்பது ஆன்றோர் கருத்து. அந்த ஜகன்மோகனனின் அருளாலும், ஜகத்குருவின் ஆசியாலும் என்னால் இயன்றவரை மூல ஸ்லோகத்தை ஒத்த ஓசை நயத்தையும், பொருள் நயத்தையும் தமிழில் கொண்டுவர முயன்றுள்ளேன். பிழையிருப்பின் என்னுடைய குறைகளைப் பொறுத்தருள்க, நிறை தெரிந்தால் ஈசன் செயல்.

1

ஸதா பாலரூபா$பி விக்னார்த்தி ஹந்த்ரி
மஹா தந்தி வக்த்ரா$பி பஞ்சாஸ்ய மான்யா
விதீந்த்ராதி ம்ருக்யா கணேஷாபி தாமே
விதத்தாம் ஸ்ரியம்கா$பி கல்யாண மூர்த்தி:

பால முகத்தேனும் வினைமலை பொடிக்கும்
வேழ முகத்தேனும் சிங்கங்கள் துதிக்கும்
இந்திரன் முதலோர் போற்றும் கணநாதா
புந்தியில் வைத்தேன் மங்களம் அருள்வாய்.

முதலில் கடவுள் வாழ்த்தாக கணபதி துதியைப் பாடியுள்ளார் ஸ்ரீ ஆதிசங்கரர். பாலன் அதாவது சிறுபிள்ளை போன்ற முகத்தை உடையவராக இருந்தபோதிலும், மகா பலம் பொருந்திய வினை மலைகளை உடைத்தெறியக் கூடிய வலிமை படைத்தவரும், வேழம் அதாவது யானையின் முகத்தை உடையவராக இருந்தபோதிலும் யானைக்கு எதிரியாகிய சிங்கங்கள் எல்லாம் துதிக்கக் கூடிய பெருமை வாய்ந்தவரும் (இந்த இடத்தில் சிங்கங்கள் என்பதற்கு பிரும்மாதி தெய்வங்களாகிய சிங்கங்கள் அதாவது பெருங் கடவுளர்கள் என்று பொருள் கூறுவர் - விநாயகர் வணக்கம் வைத்து விட்டுத் தானே எந்தத் தெய்வத்துக்கும் பூஜை, புனஸ்காரங்கள் தொடங்குகின்றன அல்லவா?), இந்திரன் முதலிய

தேவர்கள் அனைவரும் எப்போதும் போற்றுகின்ற கணத் தலைவருமான கணபதியை புத்தியில் (புந்தியில் என்பது திரிபு) வைத்து துதிக்கின்றேன்.அவர் இப்போதும் எப்போதும் மங்களத்தை அருளட்டும். உடலின் முன்பாகம் விரிவடைந்து பின்பகுதி குறுகியிருப்பதால் சிங்கத்துக்கு பஞ்ச மிருகம் என்று பெயர். இதே பொருளில்தான் பூஜையின் போது நீர்வைக்கப் பயன்படும் பாத்திரத்துக்கும் பஞ்சபாத்திரம் என்று பெயர் ஏற்பட்டது. (சுப்ரமண்ய புஜங்கம் சம்ஸ்கிருதச் செய்யுட்களில் $ என்ற குறியீடு உள்ள இடங்களில் ஒரு மாத்திரை கூட்டி ஒலிக்க வேண்டும். அ என்ற எழுத்து சேர்ந்து வந்து, தொக்கி நிற்கும்போது இதுபோன்ற கூடுதல் ஒலிப்பு ஏற்படுகிறது.)

2

ந ஜானாமி ச'ப்தம் ந ஜானாமி சார்த்தம்
ந ஜானாமி பத்யம் ந ஜானாமி கத்யம்
சிதேகா ஷடாஸ்ய ஹ்ருதி த்யோததேமே
முகான்னி: ஸரந்தே கிரச்'சாபி சித்ரம்.

ஓதலும் அறியேன் பொருளும் அறியேன்
பாடலும் அறியேன் உரைகளும் அறியேன்
அகத்தினில் ஒரொளி அறுமுகத்தே உதிக்க
வாக்கினில் சுரந்தது பாக்களின் அருவி.

அடுத்ததாக அவையடக்கம் என்ற வகையில், தான் பெரும் ஞானியாக இருந்தபோதிலும், தன்னைச் சிறியவனாகக் காட்டிக் கொண்டு, கடவுளின் அருளைப் பெரிதும் போற்றி இந்த ஸ்லோகத்தை ஸ்ரீஆதிசங்கரர் இயற்றியுள்ளார். (இங்கு, சம்ஸ்கிருதச் செய்யுளில் ச' என்று குறிப்பிடப்பட்டுள்ள எழுத்து, ஸ—வுக்கும், ஷ—வுக்கும் இடைப்பட்டது. சிவன், சங்கரன் என்ற சொற்களில் வரும் ச என்பதற்குரிய ஒலிப்பை உடையது. அதைக் குறிக்க ச' என்ற குறியீட்டுடனான எழுத்து இந்தப் பாமாலை முழுவதும் பயன்படுத்தப்படுகிறது.)

வேதம் முதலிய ஓதுதலுக்குரிய விஷயங்களையும் நான் அறியமாட்டேன். (ஓசைநயத்துடன் கூடிய இசை நுணுக்கங்களை நான் அறியமாட்டேன் என்றும் ஓர் அர்த்தம் செய்து கொள்ளலாம். ஏனெனில், சப்தம் என்ற பதத்துக்கு இசை, ஸ்ருதி எனப்படும் வேதம் ஆகிய இரு அர்த்தங்களும் பொருந்தும்.) அவற்றின் பொருளையும் அறியமாட்டேன். கடவுளை துதிக்கும் பாடல்களையோ, அவரது பெருமையை உரைக்கும் கட்டுரைகளை யோ நான் அறியமாட்டேன். ஆனால், எனது உள்ளத்திலே, ஆறுமுகங்களுடன் கூடிய ஓர் ஒளி உதித்த உடனேயே, அதாவது ஷண்முகக் கடவுளை நினைத்த மாத்திரத்திலேயே, எனது வாக்கில் பாடல்கள் அருவியைப் போல் கொட்டத் தொடங்கிவிட்டன.

3

மயூராதி ரூடம் மஹாவாக்ய கூடம்
மனோஹாரி தேஹம் மஹாச்சித்த கேஹம்
மஹீதேவ தேவம் மஹாவேத பாவம்
மஹாதேவ பாலம் பஜேலோக பாலம்.

மயிலேறும் மன்னன் மகாதத்வ வண்ணன்
மனம்நாடும் வடிவோன் மாதவத்தார் உயிரோன்
அந்தணர் அரும்புகழ் அருமறை திருப்பொருள்
ஆதிசிவன் புதல்வ! அகிலத்தின் தலைவ!

இப்போது முருகப் பெருமானைப் பற்றிக் கூறத் தொடங்குகிறார் ஸ்ரீ ஆதிசங்கரர். முருகன் எப்படிப்பட்டவன்? மயிலேறி வந்து பக்தர்களை ஆளும் மன்னன், வேதங்களில் கூறப்பட்டுள்ள மஹாவாக்யங்களின் (மகா தத்துவங்களின்) உறைவிடமானவன், அடியார்கள் மனம் நாடுகின்ற பல்வேறு வடிவங்களை எடுத்து வருபவன், மாதவம் பொருந்திய ஞானியர்களின் உயிராக

விளங்கக் கூடியவன், ஒழுக்கத்தில் சிறந்த அந்தணர்களால் புகழப்படுபவன், அரிய மறையின்(வேதத்தின்) உயர்ந்த உட்பொருளாகத் திகழ்பவன், மகாதேவன் எனப் போற்றப்படும் ஆதிசிவனின் புதல்வன், இந்த அகிலத்தை எல்லாம் கட்டிக் காக்கும் தலைவன்,நமது முருகப் பெருமான். (இங்கு மஹாவேத பாவம், மஹாதேவ பாலம் ஆகியவற்றில் வருகின்ற பா என்ற எழுத்தை அழுத்தி உச்சரிக்க வேண்டும். பாலன் என்று அழுத்திச் சொன்னால் குமரன் என்றும், பாலன் என்று பாவுக்கு அழுத்தம் கொடுக்காமல் சொன்னால் பரி பாலனம் செய்யும் தலைவன் என்றும் பொருள் கொள்ளப்படும்.) இந்த ஸ்லோகத்தை ஆதிசங்கரர் பாடிய மாத்திரத்தில் அவருக்கு முருகப் பெருமான் தரிசனம் கொடுத்ததாக ஐதீகம்.

4

யதா ஸன்னிதானம் கதா மானவாமே
பவாம் போதிபாரம் கதாஸ்தே ததைவ
இதி வ்யஞ்ஜயன் ஸிந்துதீரே யஆஸ்தே
தமீடே பவித்ரம் பராச'க்தி புத்ரம்.

என்னுடை சந்நிதி வந்தவர் எவரும்
தன்னுடை பவக்கடல் கடந்தவ ராவர்
என்றே உரைத்து செந்தூர் கரையில்
நன்றே உறையும் சக்தியின் மைந்த!

இந்தச் செய்யுளில் (ஸ்லோகத்தில்) திருச்செந்தூர் கடற்கரையில் சுப்ரமண்யன் வீற்றிருப்பதற்கான காரணத்தை ஸ்ரீ ஆதிசங்கரர் தெரிவிக்கிறார். முருகப் பெருமான் திருச்செந்தூரில் எப்படி வீற்றிருக்கிறான் தெரியுமா? தான் குடியிருக்கும் இந்த இடத்துக்கு வந்து தன்னை வணங்குகின்ற எந்த பக்தனும், பவக்கடலை அதாவது

இதுவரை அவர்கள் தேடி வைத்துள்ள, பிறவிச் சுழலுக்குக் காரணமான சம்சார சாகரத்தைக் கடந்துவிடுகிறார்கள் என்பதை உணர்த்தும் வகையில் கடலின் ஓரத்தில், செந்தூர் கடற்கரையில், எப்போதும் நன்மையே செய்யும் வகையில் பராசக்தியின் மைந்தனாகிய சுப்ரமண்யன் வீற்றிருக்கிறான்.

5

யதாப்தேஸ் தரங்கா லயம்யந்தி துங்கா
ஸததைவா பத: ஸன்னிதௌ ஸேவதாமே
இதிவோர்மி பங்க்திர் ந்ருணாம் தர்ச'யந்தம்
ஸதா பாவயே ஹ்ருத்ஸரோஜே குஹம்தம்

அலைகள் விழுந்து அழிவது போலாம்
தலைகள் வணங்கின் கவலைகள் ஒழியும்
கடலைச் சுட்டும் குகையின் கனலென்
இதயத் தாமரை இருத்தி வாழிய!

அடுத்ததாக, பக்தனின் கவலைகளை அழிக்கும் திருச்செந்தூர் முருகப்பெருமானின் இயல்பை வர்ணிக்கிறார். திருச்செந்தூர் கடற்கரையிலே வந்து விழும் அலைத்துளிகள் தானே அழிந்து விடுவதைப்போல, தன்னை வணங்கும் பக்தர்களின் கவலைகள் எல்லாம் அழிந்துவிடும் என்று கூறுவதைப் போல கடலைக் காட்டியபடி முருகப் பெருமான் வீற்றிருக்கிறான். ஞானிகளின் மனக்குகையிலே அறிவொளியாய் சுடர்விடும் அந்த குகப் பெருமான், எனது இதயத்தாமரையில் எப்போதும் சிறப்பாக வீற்றிருக்கட்டும்.

6

கிரௌ மன்னிவாஸே நரா யே$அதிரூடா
ஸ்ததா பர்வதே ராஜதே தே$அதிரூடா:
இதீவ ப்ருவன் கந்த சை'லாதிரூட:
ஸதேவோ முதேமே ஸதா ஷண்முகோ$ஸ்து.

கந்தன் ஏறிய கந்தமா மலையில்
வந்து ஏறியே வணங்கிடும் பக்தன்
கைலாஸ மேறிய புண்ணியம் பெறுவான்
கனிவாய் கூறிய அறுமுகன் வாழிய!

இப்போது சுகந்த மலை எனப்படும் கந்தமாதன பர்வதத்தின் பெருமை பற்றி ஆதிசங்கரர் குறிப்பிடுகிறார். கந்தனாகிய தனதுகாலடிபட்ட இந்தக் கந்தமாதன பர்வதத்திலே (திருச்செந்தூரில் கடலருகே உள்ள கற்பாறையில்தான் முருகன் கோவில் உள்ளது. இந்தப் பாறை,ஒருகாலத்தில் நெடிதுயர்ந்து நின்ற கந்தமாதன மலையின் மிச்ச சொச்சம் என்பது ஐதீகம்.) ஏறிவந்து தன்னை வணங்கும் பக்தன், கைலாஸ மலையேறிச் சென்று சிவபெருமானை தரிசித்த புண்ணியம் பெறுவான் என்று கனிவுடன் எடுத்துக்கூறிய அறுமுகன் என் அகத்தே வாழ்க.

7

மஹாம் போதிதீரே மஹா பாபசோரே
முநீந்த்ரா னுகூலே ஸுகந்தாக்ய சை'லே
குஹாயாம் வஸந்தம் ஸ்வபாவோ லஸந்தம்
ஜனார்தி ஹரந்தம் ச்'ரயாமோ குஹம்தம்.

பெருங்கடல் கரையில் பெரும்பவம் அழிக்கும்
பெருமுனி நோற்கும் பெருமண மலையில்
குகையுள் வசிக்கும் தன்னொளி வசந்தன்
குறைகள் நசிக்கும் குகனே போற்றி!

இப்போது குகப்பெருமானின் பெருமையை எடுத்துரைக்கிறார். மிகப் பரந்த கடலின் கரையிலே அமைந்திருப்பதும், பெரும் பாவங்களை அழிக்கக்கூடியதும், தவத்தில் சிறந்த பெருமுனிகள் எல்லாம் நோன்பிருந்து வரங்களைப் பெறுவதற்கு

இடமளிப்பதும், மிகுந்த மணம் நிறைந்ததுமான மலையில், (கந்தம் என்றால் வாசனை என்று பொருள். அதனால் இதற்கு கந்தமாதன பர்வதம் என்று பெயர்) குகையில் வசிக்கும் (மனக்குகையில் வசிக்கும் என்றும் பொருள்), சுயஒளியால் பிரகாசிக்கின்ற இனிய தென்றலைப் போன்றவன் முருகப் பெருமான். பக்தர்களின் குறைகளை அழிக்கும் அந்த குகப் பெருமானைப் போற்றுகிறேன்.

8

லஸத் ஸ்வர்ணகேஹே ந்ருணாம் காமதோஹே
ஸுமஸ்தோம ஸஞ்சன்ன மாணிக்ய மஞ்சே
ஸமுத்யத் ஸஹஸ்ரார்க துல்ய ப்ரகாச'ம்
ஸதா பாவயே கார்த்திகேயம் ஸுரேச'ம்.

பொன்வீடு வசித்து முறையீடு தீர்த்து
மணம்வீசு மலர்நிறை மாணிக்க மஞ்சத்து
ஆயிரம் ஞாயிற்று அருளொளி வீசும்
அறுவர் வளர்த்த அமரேச போற்றி!

முருகப் பெருமானின் பள்ளியறை அழகு இங்கு வர்ணிக்கப்படுகிறது. பொன்னாலாகிய மண்டபத்திலே (பள்ளியறையிலே) வீற்றிருந்து, பக்தர்களின் முறையீடுகளை எல்லாம் தீர்த்துவைத்து, மணம் வீசுகின்ற மலர்கள் நிறைந்த மாணிக்க மஞ்சத்திலே ஆயிரம் சூரியனின் பிரகாசத்தைப் போன்ற அருள் ஒளியை வீசுகின்ற, ஆறு கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்ட, அமரர்களின் படைத்தலைவனைப் போற்றுகின்றேன்.

9

ரணத்தம் ஸகே மஞ்ஜுளே஽த்யந்த சோ'ணே
மனோஹாரி லாவண்ய பீயுஷ் பூர்ண
மன: ஷட்பதோமே பவக்லே ச'தப்த:
ஸதா மோததாம் ஸ்கந்ததே பாதபத்மே.

அன்னம் சூழ்ந்து செந்நிறம் பூண்டு
அகத்தை அள்ளும் அடிமலர் அழக
வாழ்கடல் வாதனை என்மன வண்டு
சூழ்ந்துநின் மலரடி மொய்ப்பதில் மகிழ்க!

முருகனின் பதமலர் அழகு எப்படிப்பட்டது தெரியுமா? அவனோ செக்கச் சிவந்த மேனியன். அப்படிப்பட்ட அவனது பாதங்கள் மேலும் சிவந்து செந்தாமரை மலர்போலக் காட்சியளிக்கின்றன. அதனால் அவற்றைத் தாமரைப் பூக்கள் என மயங்கி அன்னப் பறவைகள் சூழ்ந்து நிற்கின்றன.அப்படிப்பட்ட மனத்தை அள்ளும் அழகு நிறைந்த பாதமலர்களைக் கொண்டவன் அந்த பாலகன். அன்னங்கள் மட்டுமா அவன் பாதங்களை மொய்க்கின்றன? 'எப்போதும் துக்கத்தால் நிரம்பிய என் மனமாகிய வண்டும் அல்லவா, முருகப் பெருமானே! உனது பாதங்களைச் சுற்றி வருகிறது' என்கிறார் நமது சார்பாக ஸ்ரீ ஆதிசங்கரர்.

10

சுவர்ணாப திவ்யாம் பரைர் பாஸமானாம்
க்வணத் கிங்கிணி மேகலா சோ'பமானாம்
லஸத்தேம பட்டேன வித்யோத மானாம்
கடிம் பாவயே ஸ்கந்ததே தீப்யமானாம்.

பொன்னால் புனைந்த ஆடைகள் தரித்து
கிங்கிங் கிணிகிணி சலங்கை இசைக்க
உண்மை வாய்ந்த ஞானியர் போற்றும்
திண்மை இடையோன் கந்தா வாழிய!

முருகப் பெருமானின் இடையழகை இப்போது வர்ணிக்கிறார் ஸ்ரீஆதிசங்கரர். முருகனின் இடையிலே பொன்னாடைகள் கட்டப்பட்டுள்ளன. மேலும் அவன் குழந்தைக் கடவுள் அல்லவா?

அதனால் குழந்தைகள் நடந்தால் இனிய ஓசையைத் தரும் கிங்கிணி எனப்படும் ஒட்டியாணம் போன்ற அணிகலனும் அவனது இடையை அலங்கரிக்கிறது. யோக மார்க்கத்திலே மூலாதாரச் சக்கரம் அமைந்துள்ள இடுப்புப் பகுதி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. மனிதனுக்கு முதுகெலும்பே அங்குதானே தொடங்குகிறது. ஆகையால் மெய்ப்பொருள் நாடும் ஞானியர் மூலாதார சக்தி நிறைந்த யோகீஸ்வரனான முருகப்பெருமானின் இடையை போற்றித் துதிக்கின்றனர். அப்படிப்பட்ட கந்தப் பெருமான் என் நினைவில் வாழ்க.

11

புலிந்தேச' கன்யாகனா போகதுங்க
ஸ்தன ஆலிங்கனாஸக்த காஷ்மீர ராகம்
நமஸ்யாமஹம் தாரகாரே தவோர:
ஸ்வபக்தாவனே ஸர்வதா ஸானுராகம்.

வேடுவர் பெண்ணை சேர்த்து அணைத்து
மடுவில் பூசிய சாந்து சுமந்த
செம்மார் வேலா தாரகன் காலா
அன்பர் ஆவல் தீர்க்கும் நேசா

பாதங்களையும், இடையையும் வர்ணித்த ஸ்ரீஆதிசங்கரர் இந்தச் செய்யுளில் சுப்ரமண்யப் பெருமானின் மார்புப் பகுதியை தியானிக்கிறார். தாரகாசுரனைக் கொன்ற அந்தக் கடவுள், வள்ளியின் காதலன் அல்லவா? செஞ்சாந்தும் சந்தனமும் பூசிய அந்த வேடுவர் குலப் பெண்ணை மார்போடு இறுக அணைத்ததால் முருகன் தனது மார்பிலும் சிவப்புச் சாந்தை சுமந்து நிற்கிறானாம். அன்பர்களின் ஆவல்களைத் தீர்த்து வைக்கின்ற நேசம் நிறைந்த அந்த சுப்ரமண்யப் பெருமானை தியானிக்கிறேன்.

12

விதௌ க்லுப்ததண்டான் ஸ்வலீலா த்ருதாண்டான்
நிரஸ்தேப சு'ண்டான் த்விஷத்கால தண்டான்
ஹதேந்த்ராரி ஷண்டாஞ் ஜகத்ராண சௌ'ண்டான்
ஸதாதே ப்ரசண்டான் ஸ்ரயே பாஹுதண்டான்.

துதிக்கா பிரும்மனை சிறையில் அடைத்தாய்
துதிக்கை விலங்கின் திமிரை துடைத்தாய்
மதிக்கா பதுமன் அரக்கர் புடைத்தாய்
மதித்தே துதித்தேன் பதினிரு புயத்தாய்.

முருகப் பெருமானை பாதாதி கேசம் (பாதத்திலிருந்து தலைமுடி வரை) வர்ணிக்கும் ஸ்ரீ ஆதிசங்கரர், இப்போது அவனது பன்னிரு கரங்களைப் புகழ்கிறார். தன்னை மதிக்காமலும், பிரணவத்தின் பொருள் தெரியாமலும் விழித்த பிரும்ம தேவனை சிறையில் அடைத்து திருவிளையாடல் நடத்திய கரங்கள் அவனது பன்னிரு கரங்கள். கொடிய விலங்கு இயல்புடைய கஜமுகாசுரனின் கொட்டத்தை அடக்கியவை அவனது பன்னிரு கரங்கள். இந்திரனை மதிக்காமல் செருக்குடன் செயல்பட்ட சூரபதுமன் உள்ளிட்ட அரக்கர்களை நையப் புடைத்தவை அவனது பன்னிரு கரங்கள். அப்படிப்பட்டப் பெருமை வாய்ந்த முருகனின் பனிரெண்டு திருக்கரங்களையும் மதிப்புடன் போற்றுகிறேன்.

13

ஸதா சா'ரதா: ஷண்ம்ருகாங்கா யதிஸ்யு:
ஸமுத்யந்த ஏவ ஸ்திதாச்'சேத் ஸமன்தாத்
ஸதா பூர்ணபிம்பா: களங்கைச்'ச ஹீனா–
ஸ்ததா த்வன்முகானாம் ப்ருவேஸ்கந்த ஸாம்யம்.

குறைநறு திலகக் கதிரறு முகத்து
குறையொரு நிலவு ஒப்பில எண்ணில்
கறையறு முகத்து உவமை கூறிட
அறுமதி இலவே குறைமதி உளதே!

ஆறுமுகனின் முகத்தழகு இங்கே வர்ணிக்கப்படுகிறது. நறுமணம் மிகுந்த சந்தனம் தீட்டப்பட்ட கறையுடைய, ஒளிவீசும் அவனது ஆறுமுகங்களை, கறை படிந்ததுபோல் தோற்றமளிக்கும் நிலவுடன் ஒப்பிடலாம் என்றால் ஒரேயொரு சந்திரனே இருப்பதால் அந்த உவமைக்கு எண்ணிக்கை அடிப்படையில் குறை ஏற்படுகிறது. சரி, சந்தனக் கறை தீட்டப்படாத முருகனின் முகத்தை நிலவோடு ஒப்பிட்டுக் கூறலாம் என்றால், ஆறு நிலாக்கள் இல்லை என்பது மட்டுமல்ல, தேய்ந்து மறையக்கூடிய குறையுடைய சந்திரன் எங்கே? எப்போதும் தேயாமல் பூரண ஒளிவீசும் முருகனின் முக அழகு எங்கே? ஆக ஒப்புமை கூறமுடியாத பொலிவுடையவை முருகனின் திருமுகங்கள்.

14

ஸ்புரந் மந்தஹாஸை: ஸஹம்ஸானி சஞ்ச–
த்கடாக்ஷாவளி ப்ருங்க ஸங்கோஜ் ஜ்வலானி
ஸுதாஸ்யந்தி பிம்பா தரணீச' ஸூனோ
தவாலோகயே ஷண்முகாம் போருஹாணி

நின்முக முறுவல் மலருறு அன்னம்
நின்கடைப் பார்வை மலர்மொய் வண்டு
நின்இதழ் உமிழ்நீர் மலர்பொழி அமுதம்
நின்அறு முகமும் தாமரை மலரே..

முருகனின் ஆறுமுகங்களை நிலவுடன் ஒப்பிட முடியாது என்று முந்தைய செய்யுளில் கூறிய ஸ்ரீ ஆதிசங்கரர், முருகனது முக லாவண்யங்களை இங்கே கவித்துவமாய் வர்ணிக்கிறார்.

முருகனின் முகத்தில் தவழும் புன்னகையானது, மலர்மீது வீற்றிருக்கும் அன்னப் பறவையைப்போல் உள்ளது. அவனது கடைக்கண் பார்வையோ முகமாகிய மலர் மீது மொய்க்கின்ற வண்டுபோல் திகழ்கிறது. அந்த பாலனின் இதழ்களிலிருந்து வழிகின்ற உமிழ்நீரோ மலரிலிருந்து வழிகின்ற தேனாகிய அமுதம்போல் காட்சியளிக்கிறது. ஆக, முருகப் பெருமானின் ஆறு முகங்களும் ஆறு தாமரை மலர்கள்தானே!

15

விசா'லேஸு கர்ணாந்த தீர்கஷ்வ ஜஸ்ரம்
தயாஸ்யந்திஸு த்வாதச'ஸ்வீக்ஷணேஷு
மயீஷத்கடாக்ஷ: ஸக்ருத்பாதிதச்'சேத்
பவேத்தே தயாசீ'ல கா நாம்ஹானி:?

விரிந்து அகன்று செவிவரை நீண்டு
சுரக்கும் கருணை பன்னிரு கண்ணா
அதனுள் ஒருகண் கடைநோக்குப் பார்வை
என்மீது படர குறையென நினக்கு?

இப்போது முருகனின் கண்ணழகை வர்ணித்து, பக்தர்களின் சார்பில் கடைக்கண் பார்வை அருள் புரிய கோரிக்கை வைக்கிறார் ஆதிசங்கரர். முருகா, உனது கண்கள் விரிந்து அகன்றவை. செவி வரை நீண்டுள்ள உனது பனிரெண்டு கண்களும் கருணையைச் சுரக்கின்றன. அதில் ஒரு கண்ணின் கடைநோக்குப் பார்வையாவது என் மீது படர்வதற்கு முருகா உனக்கு எதுதான் குறையாக உள்ளது? என்று வினவுகிறார்.

16

ஸுதாங்கோத்பவோ மேஃஸி ஜீவேதி ஷட்தா
ஜபந்மந்த்ரமீசோ' முதா ஜிக்ரதே யான்
ஜகத்பார ப்ருத்ப்யோ ஜகந்நாத தேப்ய:
கிரீடோஜ் ஜ்வலேப்யோ நமோ மஸ்தகேப்ய:

'அங்கம் உதித்த அருமைப் புதல்வ'
பொங்கும் உவகையில் அரனார் அணைத்து
உலகின் முதல்வன் உச்சி முகர்ந்த
உன்னறு சென்னிக்கு என்னுடை வணக்கம்.

பாதத்தில் வர்ணனையைத் தொடங்கிய ஸ்ரீ ஆதிசங்கரர் இப்போது முருகனின் சென்னியை (தலையை) வர்ணிக்கிறார். குழந்தை பிறந்த உடனேயே ஆகா! எனது உடலில் இருந்து உதித்த குழந்தை என தாய் அதனைப் பாசத்துடன் உச்சி முகர்கிறாள். முருகப் பெருமானோ, உலகின் முதல்வனாகத் திகழும் சிவபெருமானின் நெற்றிக் கண்ணில் இருந்து நேரடியாக உதித்தவன் அல்லவா? அதனால், 'எனது அங்கத்திலிருந்து உதித்த அருமைப் புதல்வனே' என தாய்க்குரிய பாசத்துடன் தந்தையாகிய சிவபெருமானே முதலில் உச்சி முகர்ந்த பெருமை வாய்ந்தது முருகப் பெருமானின் 6 சிரங்களும். அப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த 6 சென்னிகளையும் வணங்கித் துதிக்கிறேன்.

17

ஸ்புரத்ரத்ன கேயூர ஹாராபிராம—
ச்'சலத்குண்டல ஸ்ரீலஸத்கண்டபாக:
கடௌ பீதவாஸ: கரே சாருஸக்தி:
புரஸ்தான்மமாஸ்தாம் புராரேஸ்தனுஜ:

மார்பில் ரத்தின மாலை ஒளிரும்
காதணி அசைவால் கன்னமும் ஒளிரும்
பட்டாடை உடுத்தி பகட்டான வேலொடு
பக்கத்தில் என்றுமே சிவசுதன் தங்குக.

பாலமுருகனுக்கு இப்பாடலில் புகழ்மாலை சூட்டப்படுகிறது. முருகனின் மார்பிலே ரத்தின மாலை ஒளிர்கிறது. அவன் அணிந்துள்ள ஒளிபொருந்திய காதணியின் அசைவால் அவனது கன்னமும் ஒளிர்கிறது. ஒளிபொருந்திய பட்டாடையை உடுத்தி, ஒளிவீசுகின்ற பகட்டான வேலாயுதத்தை தாங்கிப் பிடித்துள்ள அந்த ஒளிக்கடவுளான சிவனின் குழந்தை என் பக்கத்திலேயே எப்போதும் வீற்றிருக்கட்டும்.

18

இஹாயாஹி வத்ஸேதி ஹஸ்தான்ப்ரஸார்யா–
ஹ்வயத்யாதராச் சங்கரே மாதுரங்கான்
ஸமுத்பத்ய தாதம் ஸ்ரயந்தம் குமாரம்
ஹராஸ்லிஷ்டகாந்த்ரம் பஜே பாலமூர்த்திம்.

சக்தியின் மடியினில் அமர்ந்திடு போதினில்
சங்கரர் அன்புடன் கரத்தினை நீட்டிட
தாவியே பாய்ந்து தழுவியே மகிழும்
குழந்தைக் கடவுள் குமரா போற்றி.

சிவன், சக்தி, குமரன் என மூன்று கடவுள்களும் ஒருங்கே அமையப்பெற்றுள்ள சோமாஸ்கந்த ரூபத்தை ஸ்ரீ ஆதிசங்கரர் இங்கே துதிக்கிறார். (ச உமா ஸ்கந்தர், அதாவது உமை மற்றும் கந்தனுடன் இணைந்து தோன்றும் சிவ மூர்த்தம் சோமாஸ்கந்த ரூபம் ஆகும்.) சேய்க் கடவுளான முருகப் பெருமான் தனது தாய் சக்தியின் மடியினில் அமர்ந்திருக்கும் வேளையில், தந்தையாகிய சங்கரர் அன்புடன் அவரது கரத்தை நீட்டிட, உடனே ஒரே தாவலாக அவரிடம் செல்கிறான். இவ்வாறாக, உலகின் தாய் தந்தையராகிய பார்வதி – பரமேஸ்வரருடன் மகிழ்ச்சியாய் விளையாடும் அந்தக் குழந்தைக் கடவுளைப் போற்றித் துதிக்கிறேன்.

19

குமாரேச' ஸூனோ ஸ்கந்த சேனா–
பதே ச'க்திபாணே மயூராதிரூட
புலிந்தாத்மஜாகாந்த பக்தார்திஹாரின்
ப்ரபோ தாரகாரே ஸதாரக்ஷமாம் த்வம்

குமரா மைந்தா குகனே கந்தா
தலைவா வேலா மயில்வா கனனே
புலிந்தன் மருகா துயர்துடைப் போனே
தாரகன் காலா காப்பாய் என்னை.

இளைஞனான ஸ்கந்தப் பெருமானின் புகழ் இங்கே போற்றப் படுகிறது. குமரனாய், சிவ–சக்தி மைந்தனாய் விளங்கும் குகப் பெருமானே, நீயே ஸ்கந்தனாய், தேவசேனையின் தலைவனாய் திகழ்கிறாய். சக்தி எனப்படும் வேலாயுதத்தைக் கையில் பிடித்துள்ள மயில் வாகனனாகிய அந்த முருகன், புலிந்தன் என்ற பெயர் கொண்ட வேடுவர் தலைவனின் மகளாகிய வள்ளியின் கணவன். பக்தர்களின் துயர்களைப் போக்குபவனும், தாரகாசுரன் முதலிய அரக்கர்களை வதைத்தவனுமாகிய அந்த முருகப் பெருமான் என்னைக் காக்கட்டும்.

20

ப்ரசா'ந்தேந்த்ரியே நஷ்டஸம்க்ஞே விசேஷ்டே
கபோத்காரிவக்த்ரே பயோத்கம்பிகாத்ரே
ப்ரயாணோன்முகே மய்யநாதே ததானீம்
த்ருதம்மே தயாளோ பவாக்ரே குஹத்வம்.

பொறிகள் தளர்ந்து உணர்வும் அகன்று
பிழை பொழிந்து பயத்தால் நடுங்கி
புறப்படு நிலையில் சடுதியில் தோன்றி
குகனே தயாளா காப்பாய் என்னை.

இந்தச் செய்யுளிலும், அடுத்துவரும் இரண்டு செய்யுட்களிலும் அந்திமக் காலத்தில் பக்தனைக் காப்பாற்றி முக்தி அளிப்பவன் முருகன் என்பதை எடுத்துரைக்கிறார் ஸ்ரீ ஆதிசங்கரர்.

ஐம்பொறிகளும் தளர்ந்துபோய், உணர்வுகளும் மெல்ல அகன்று போய், கபம் (சளி) ஒழுகிய நிலையில், மரண பயத்தால் நடுங்கியபடி, நான் (பக்தன்) இறக்கும் தருவாயில், உடனடியாகத் தோன்றி பரம தயாளனே, குகனே என்னை நீ காப்பாற்ற வேண்டும்.

21

க்ருதாந்தஸ்ய தூதேஷு சண்டேஸு கோபா–
த்தஹ ச்சிந்த்தி பிந்த்தீதி மாம் தர்ஜயத்ஸு
மயூரம் ஸமாருஹ்ய மா பௌரிதி த்வம்
புர: ச'க்திபாணிர் மமாயாஹி சீ'க்ரம்.

காலன் தூதுவர் கடிந்தெனை அதட்டி
கட்டியும் வெட்டியும் துயர்தரு வேளையில்
கருணை மயிலில் விரைந்தே வந்து
கரத்தில் வேலொடு காப்பாய் என்னை.

எமதூதர்கள் பாசக் கயிற்றால் கட்டி, மிரட்டி, பல்வேறு வகைகளில் துன்புறுத்தி எனது உயிரைக் கவர்ந்து செல்லும் துயரமான தருணத்தில், கருணையாகிய மயிலில் முருகா நீ விரைந்து வந்து, ஞான சக்தியாகிய உனது வேலால் என்னைக் காப்பாற்ற வேண்டும்.

22

ப்ரணம்யா ஸக்ருத்பாதயோஸ்தே பதித்வா
ப்ரஸாத்ய ப்ரபோ ப்ரார்தயே$னேகவாரம்
ந வக்தும் க்ஷமோ$ஹம் ததானீம் க்ருபாப்தே
ந கார்யாந்தகாலே மனாகன்யுபேக்ஷா.

உன்னடி கிடந்து உன்னைத் துதித்து
உன்னால் மகிழும் அடியேன் நானும்
அந்திமக் காலம் அசைவற்ற வேளை
அலட்சிய மின்றிக் காப்பாய் என்னை.

உனது திருவடிகளில் கிடப்பதே மகிழ்ச்சி என இருந்து, அவ்விதமே உன்னைத் துதித்து, உனது அருளால் மகிழ்ச்சி அடைகின்ற பக்தனாகிய நான், வாழ்வின் கடைசி தருணத்தில் ஏதும் சொல்ல இயலாதவனாய், கைகால்களைக்கூட அசைக்க முடியாதவனாய் கிடக்கின்ற போதிலும், முருகா என்னை அலட்சியப்படுத்தாமல் வந்து நீ காப்பாற்றி உனது பதமலரைத் தந்தருள வேண்டும்.

23

ஸஹஸ்ராண்டபோக்தா த்வயா சூ'ரநாமா
ஹதஸ்தாரக: ஸிம்ஹவக்த்ரச்'ச தைத்ய:
மமாந்தர்ஹ்ருதிஸ்தம் மன:க்லேச'மேகம்
ந ஹம்ஸி ப்ரபோ கிம் கரோமி? க்வ யாமி?

அண்டம் ஆயிரம் ஆண்ட சூரனும்
தாரகன் வக்தரன் சிங்கனும் கொன்றாய்
வான்மேக மனமோகம் வதைப்பாய் இல்லை
செய்வதும் என்ன? செல்வதும் எங்கு ?

இருபத்திமூன்று மற்றும் இருபத்திநான்காவது செய்யுட்களில், பக்தர்களின் மனத்துயரங்களைப் போக்கிக் காப்பாற்ற முருகனை ஸ்ரீ ஆதிசங்கரர் வேண்டிக் கொள்கிறார். பூமி உள்ளிட்ட பல்லாயிரம் அண்டங்களையும் பேரண்டங்களையும் ஆண்ட சூரபத்மன், தாரகன், வக்தரன், சிங்கமுகன் ஆகிய அரக்கர் களைக் கொன்ற முருகப் பெருமானே, வானமாகிய எனது மனத்திலே கருமேகமாய் எப்போதும் சூழ்ந்திருக்கும் மோகத்தை கொல்ல மாட்டேன் என்கிறாயே? இந்த மோகப் பேயை நீ வதைக்காவிட்டால், நான் என்னதான் செய்வது? எங்குதான் செல்வது? என்று வினவுகிறார். 'மோகத்தைக் கொன்றுவிடு அல்லால் என் மூச்சை நிறுத்திவிடு' என்று சிவசக்தியிடம் மகாகவி பாரதியார் வேண்டுவது இங்கு நினைவுகூரத்தக்கது.

24

அஹம் ஸர்வதா துக்கபாரா வஸன்னோ
பவந்தீ நபுன்துஸ் த்வதன்யம் ந யாசே
பவத்பக்திரோதம் ஸதா க்லுப்தபாதம்
மமாதிம் த்ருதம் நாச'யோமாஸுத த்வம்.

அடியேன் என்றும் துக்கச் சுமையோன்
அன்பர் காக்கும் உனையன்றி நாடேன்
துன்பம் கொடுக்கும் உன்னன்பு கெடுக்கும்
மனநோய் களைவாய் சக்தியின் மைந்தா.

நான் எப்போதுமே துக்கமாகிய சுமையைக் கொண்டிருப்பவன். பக்தர்களைக் காப்பாற்றுகின்ற பரம தயாளனாகிய உன்னைத் தவிர வேறு எந்தவொரு தேவரையும், கடவுளரையும் நான் நாட மாட்டேன். அதனால், துன்பத்தைக் கொடுக்கக் கூடியதும், அந்த துயர வலியினால் உன் மீதான பக்தியைக் குறைத்து உனது அன்பையும் கெடுக்கக் கூடியதுமான எனது மனமயக்கத்தை சக்தி உமை பாலகனாகிய முருகா, உடனடியாக களைந்துவிடு.

25

அபஸ்மார குஷ்ட க்ஷயார்ச': ப்ரமேஹ—
ஜ்வரோன் மாதகுல்மாதி ரோகா மஹாந்த:
பிசா'சாச்'ச ஸர்வே பவத் பத்ரபூதிம்
விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்ரவந்தே.

குஷ்டம் க்ஷயம் வலிப்பு ஜுரமும்
கடுப்பு பைத்யம் பலவித நோய்களும்
பைசாச கணங்களும் பயந்தோ டும்மே
பன்னீர் இலையில் உன்னீறு பார்த்திட.

நோய்களைத் தீர்க்கும் முருகனின் திருநீற்று மகிமையை இந்தச் செய்யுளில் போற்றுகிறார் ஸ்ரீ ஆதிசங்கரர். குஷ்டம், க்ஷயரோகம், கால்கை வலிப்பு, காய்ச்சல், வயிற்றுக் கடுப்பு, மனோவியாதி உள்ளிட்ட பல்வேறு நோய்களும், பிறரால் ஏவிவிடப்பட்டு கெடுதல் செய்கின்ற பிசாசுக் கூட்டங்களும் (பிறரது தீய எண்ணங்களால் நமக்கு ஏற்படுகின்ற கெடுதல்கள் என்றும் எடுத்துக் கொள்ளலாம்)திருச்செந்தூரில் முருகன் பிரசாதமாக பன்னீர் இலையில் வைத்துத் தரப்படுகின்ற திருநீற்றை (விபூதியை) கண்ட உடனேயே விலகி ஓடிவிடும்.

26

த்ருசி' ஸ்கந்தமூர்த்தி: ஸ்ருதௌ ஸ்கந்தகீர்த்திர்
முகே மே பவித்ரம் ஸதா தச்சரித்ரம்
கரே தஸ்ய க்ருத்யம் வபுஸ்தஸ்ய ப்ருத்யம்
குஹே ஸந்து லீனா மமாசே'ஷபாவா:

கந்தனைக் கண்டு கந்தனைக் கேட்டு
கந்தன் புகழை நாவால் ஓதி
கந்தன் திருவடி கரத்தால் துதித்து
எந்தன் அங்கம் உனக்காய் இருக்க.

பக்தனின் ஐம்புலன்களும் சுப்ரமண்யக் கடவுளின் பெருமையை எப்போதும் போற்றியபடி இருக்க வேண்டும் என்பதை ஸ்ரீ ஆதிசங்கரர் இங்கு வலியுறுத்துகிறார். காண்கின்ற காட்சியெல்லாம் கந்தனாகவே கண்டு, கந்தனது பெருமை களையே செவிகளால் கேட்டு, கந்தனது புகழையே நாவால் ஓதி, கந்தனது திருவடிகளையே கரங்களால் துதித்து, பக்தனாகிய எனது அங்கம் முழுவதும் கந்தனே, உன் பொருட்டாகவே இருக்கட்டும்.

27

முனீனாமுதாஹோ ந்ருணாம் பக்திபாஜாம்
அபீஷ்டப்ரதா: ஸந்தி ஸர்வத்ர தேவா:
ந்ருணாமந்த்ய ஜானாமபி ஸ்வார்ததானே
குஹாத்தேவமன்யம் ந ஜானே ந ஜானே

முனிவர் தேவர் பக்தர் விருப்பமே
முடிக்கும் தெய்வம் எல்லா விடத்தும்
கடையனைக் கூடக்கடைத் தேற்றும் தெய்வம்
கந்தனை யன்றி அறியேன் அறியேன்.

கந்தப் பெருமானை விட்டால் கதிமோட்சம் வேறு இல்லை என்பதையும், ஸ்கந்தன் வடிவமே கடவுளின் திருக்கோலங்களில் மிகச் சிறந்தது என்பதையும் இந்தச் செய்யுள் மூலம் நிறுவுகிறார் ஸ்ரீ ஆதிசங்கரர். எந்த உலகில் உள்ள, எந்த நாட்டில் உள்ள எந்த தெய்வமும் தவத்தில் சிறந்த முனிவர்கள், கர்ம பலன்களால் உயர்ந்த ஸ்தானத்தைப் பெற்ற தேவர்கள், தன்னைப் போற்றித் துதிக்கும் பக்தர்கள் ஆகியோரது வேண்டுதல்களையே முடித்துக் கொடுக்கும். ஆனால், இந்தவித தகுதி எதுவும் இல்லாத, மிக அடிநிலையில் உள்ள கடையனைக்கூட தனது கருணையால் கடைத்தேற்றம் கொடுத்து, பெரு விடுதலை அளிக்கின்ற கடவுள் கந்தனை அன்றி வேறு யாரும் இருப்பதாக நான் அறியவில்லை என்கிறார் ஸ்ரீ ஆதிசங்கரர். அதனால் தான் கலியுக வரதன் என்று கந்தசாமி போற்றப்படுகிறான். தன்னை எதிர்த்த சூரபத்மனையும் கொன்றுவிடாமல், மயிலாகவும், சேவலாகவும் மாற்றி அவனுக்கும் முக்தி அளித்தவன் அல்லவோ முருகப் பெருமான்?

28

களத்ரம் ஸுதா பந்துவர்க: பசு'ர்வா
நரோ வாத நாரி க்ருஹே யே மதியா:
யஜந்தோ நமந்த: ஸ்துவந்தோ பவந்தம்
ஸ்மரந்தச்'ச தே ஸந்து ஸர்வே குமார

மனைவி மக்கள் சுற்றமும் நட்பும்
மற்றைய ஆணும் பெண்ணும் அனைவரும்
உன்னைப் போற்றிட வணங்கிட துதித்திட
நினைப்பவர் ஆகிட அருள்வாய் குமரா.

முருகக் கடவுளை குடும்பக் கடவுளாய் கொண்டு துதிக்க வேண்டியதன் அவசியத்தை இங்கே வலியுறுத்துகிறார் ஸ்ரீ ஆதிசங்கரர். எனது மனைவி, மக்கள், உறவினர்கள், நண்பர்கள், எனக்குத் தெரிந்த மற்றைய ஆண்கள், பெண்கள் என அனைவருமே, முருகா! உன்னைப் போற்றி வணங்கித் துதிக்கவும், உன்னை நினைத்து உருகுபவராகவும் ஆகிட அருள் புரிவாய் என எளிய பக்தனின் சார்பாய் அவர் வேண்டிக் கொள்கிறார். கந்தக் கடவுள் மீதான பக்தி, நல்ல வாழ்க்கைத் துணை, குழந்தைப் பேறு, செல்வம், செல்வாக்கு ஆகிய அனைத்துடன் ஞான மார்க்கத்தை நல்கி, முக்தியும் அளிக்க வல்லது அல்லவா? அதனால்தான் அந்தக் கந்த பக்திச் சுவையை தான் மட்டுமே பருகிடாமல், தன்னைச் சேர்ந்த அனைவருக்கும் அது கிட்ட வேண்டும் என நல்ல பக்தன் நினைக்கிறான்.

29

ம்ருகா: பக்ஷிணோ தம்ச'கா யே ச த்ருஷ்டா–
ஸ்ததா வ்யாதயோ பாதகோ யே மதங்கே
பவச்சக்தி தீக்ஷ்ணாக்ரோபின்னா: ஸுதூரே
விநச்'யந்து தே சூர்ணித க்ரௌஞ்ஜசை'லே.

கெடுசெய் மிருகம் புள்ளினம் மற்றும்
கொடுமை நோய்கள் புன்மைகள் வந்தால்
கைவேல் கொண்டு உடனே துரத்திடு
கிரௌஞ்சம் துளைத்த கூர்வடி வேலா.

தீமைகளை விரட்டிட, வடிவேலவனின் துணையை நாடுகிறார் ஸ்ரீ ஆதிசங்கரர். கெடுதிகளைச் செய்யும் துஷ்ட மிருகங்கள், அதுபோன்ற பறவைகள், கொடுமையான நோய்கள் மற்றும் பிற தீங்குகள் எனக்கு வந்தால், கிரவுஞ்ச மலையைத் துளைத்த உனது கூர்வடிவேலால் அந்தத் தீயவைகளையும் உடனே துரத்திவிடு முருகா.

30

ஜனித்ரீ பிதா ச ஸ்வபுத்ராபராதம்
ஸஹேதே ந கிம் தேவஸேனாதிநாத
அஹம் சாதிபாலோ பவான் லோகதாத:
க்ஷமஸ்வாபராதம் ஸமஸ்தம் மஹேச'.

தாயும் தந்தையும் தன்சேய் பொறுப்பர்
நீயும் அதுகொள் தேவசேனைத் தலைவா
நானொரு குழந்தை நீயுலகின் தகப்பன்
என்பிழை பொறுத்து அருள்வாய் ஈசா.

ஈசனின் அம்சமாகவும், இந்தப் பிரபஞ்சத்தைப் பரிபாலனம் செய்யும் தந்தையாகவும் விளங்கும் ஸ்கந்தப் பெருமான், குழந்தைகளாகிய பக்தர்களின் பிழைகளைப் பொறுத்து அருள வேண்டும் என்று வேண்டுகிறார் ஸ்ரீ ஆதிசங்கரர். எந்த ஒரு தாயும், தகப்பனும் தனது குழந்தையின் தவறுகளைப் பொறுத்துக் கொள்வார்கள். அதுபோல், தேவசேனையின் தலைவனான ஸ்கந்தா, உலகின் தகப்பனாகிய நீ, உனக்குக் குழந்தையாகிய எனது பிழைகளைப் பொறுத்துக் காத்தருள வேண்டும். மஹேஸ்வரனுக்குச் சமமான ஸ்கந்தப் பிரபுவே, இதனை உன்னிடம் இறைஞ்சுகிறேன்.

31

நம: கேகினே ச'க்த்யே சாபி துப்யம்
நமச்'சாக துப்யம் நம: குக்குடாய
நம: ஸிந்தவே ஸிந்துதேசா'ய துப்யம்
புன: ஸ்கந்தமூர்த்தே நமஸ்தே நமோ஽ஸ்து.

மயிலும் போற்றி வேலும் போற்றி
கடாவும் போற்றி சேவலும் போற்றி
கடலும் போற்றி செந்தூர் போற்றி
மீண்டும் போற்றி கந்தப் பெருமானே.

முருகப் பெருமானுக்கும் அவனுடைய சின்னங்களுக்கும் தனது வந்தனங்களைக் கூறி போற்றுகிறார் ஸ்ரீஆதிசங்கரர். வேதங்களின் உருவகமான மயிலுக்கு வணக்கம். பராசக்தியால் வழங்கப்பட்டதும், ஞானம் மற்றும் வீரத்தின் அடையாளமாகத் திகழ்வதுமான வேலுக்கு வணக்கம். முருகனால் அடக்கப்பட்டு அவனது வாகனமாக ஆக்கப்பட்டதும், மாயை என்ற தத்துவத்தின் உருவகமாக விளங்குவதுமான ஆட்டுக்கடாவுக்கு வணக்கம். விழிப்புணர்வு, அஹங்காரம் எனப்படும் தன்னுணர்வு ஆகியவற்றின் அடையாளமாகத் திகழும் சேவலுக்கு வணக்கம். அளவற்ற ஆனந்தத்தின் உருவகமாக விளங்கும் கடலுக்கு வணக்கம். தீமைகளின் உருவகமான அரக்கரை வென்று முருகன் அருளாட்சி புரியும் திருச்செந்தூருக்கு வணக்கம். அந்த ஸ்கந்தப் பெருமானுக்கு மீண்டும் மீண்டும் வணக்கங்கள்.

32

ஜயாநந்த பூமஞ்ஜயாபாரதாமஞ்
ஜயாமோககீர்த்தி ஜயாநந்தமூர்த்தே
ஜயானந்தஸிந்தோ ஜயாசே'ஷபந்தோ
ஜயத்வம் ஸதா முக்திதானேச'ஸூனோ.

ஆனந்தன் வாழ்க அருளோன் வாழ்க
புகழோன் வாழ்க வடிவோன் வாழ்க
கடலோன் வாழ்க உறவோன் வாழ்க
முக்திதரு முதல்வன் மைந்தா வாழ்க.

முருகனின் அருள் கிடைக்க மீண்டும் போற்றுகிறார் ஸ்ரீ ஆதிசங்கரர். எப்போதும் ஆனந்தமாக இருந்துகொண்டு, பக்தர்களுக்கும் ஆனந்தத்தை அளிக்கும் அந்த ஆனந்தன் வாழ்க. (சம்ஸ்கிருதத்தில் ஜெய கோஷமாகக் கூறப்படுவது, தமிழ் மரபுப்படி வாழ்க என்ற வாழ்த்து முழக்கமாகக் கூறப்பட்டுள்ளது.) எல்லையற்ற அருள் ஒளியாக விளங்கும் அருளோன் வாழ்க. எங்கும் பரந்து நிற்கும் புகழுடையோன் வாழ்க. காண்போர் மகிழும் வகையிலும், பக்தர்கள் நினைக்கும் தோற்றத்திலும் உள்ள வடிவோன் வாழ்க. அளவில்லாத கருணைக் கடலாகத் திகழும் கடலோன் வாழ்க. உலகில் உள்ள அனைத்து உயிரினங்களுக்கும் உறவுக்காரனாக விளங்கும் உறவோன் வாழ்க. உயிர்களுக்கு முக்தி (விடுதலை, மோட்சம்) நிலையை வரமாக வழங்குகின்றவரும், அண்டசராசரத்துக்குக் காரணமான முதல்வனுமாகிய அந்தப் பரமேஸ்வரனின் புதல்வனான முருகப் பெருமான் வாழ்க.

33

புஜங்காக்யவ்ருத்தேன க்லுப்தம் ஸ்தவம் ய:
படேத்பக்தியுக்தோ குஹம் ஸம்ப்ரணாம்ய
ஸ புத்ரான்களத்ரம் தனம் தீர்கமாயுர்
லபேத் ஸ்கந்த ஸாயுஜ்யமந்தே நர: ஸ:

புஜங்கம் என்னும் தோத்திரம் இதனை
பக்தியால் படித்தோர் பயனாய் பெறுவார்
நற்றுணை மக்கள் பொருளும் வாழ்வும்
முருகன் அருளால் முக்தியும் முடிவில்.

சுப்ரமண்ய புஜங்கத்தின் இந்த நிறைவுச் செய்யுளில், இந்தப் பாமாலையைப் படிப்பவர்களுக்குக் கிடைக்கும் பலன்களை திருவாய் மலர்ந்தருள்கிறார் ஸ்ரீ ஆதிசங்கரர். புஜங்கம் எனப்படும் இந்த ஸ்தோத்திர நூலை பக்தியுடன் படிப்பவர்கள், அதன் பலனாக நல்ல வாழ்க்கைத் துணை, மக்கட்செல்வம், பொருட் செல்வம், நீடித்த நல்வாழ்வு ஆகிய அனைத்தையும் முருகனின் அருளால் பெறுவதுடன், தமது நிறைவான வாழ்க்கையின் இறுதியில் அவன் அருளால் மீண்டும் பிறவா முக்தியையும் அடைவார்கள். ஓம் தத்ஸத்.

சிவமயம்

# ஆதிசங்கரர் அருளிய
# ஆறுமுக அரவம்
# (சுப்ரமண்ய புஜங்கம்)
## தமிழில் : பத்மன்

பால முகத்தேனும் வினைமலை பொடிக்கும்
வேழ முகத்தேனும் சிங்கங்கள் துதிக்கும்
இந்திரன் முதலோர் போற்றும் கணநாதா
புந்தியில் வைத்தேன் மங்களம் அருள்வாய். 1

ஓதலும் அறியேன் பொருளும் அறியேன்
பாடலும் அறியேன் உரைகளும் அறியேன்
அகத்தினில் ஒரொளி அறுமுகத்தே உதிக்க
வாக்கினில் சுரந்தது பாக்களின் அருவி. 2

மயிலேறும் மன்னன் மகாதத்வ வண்ணன்
மயக்கும் உடலோன் மகான்கள் உயிரோன்
அந்தணர் அரும்புகழ் அருமறை திருப்பொருள்
ஆண்டவன் புதல்வ அகிலத்து முதல்வ. 3

என்னுடை சந்நிதி வந்தவர் எவரும்
தன்னுடை பவக்கடல் கடந்தவ ராவர்
என்றே சொல்லி செந்தூர் கரையில்
நன்றே நிற்கும் சக்தியின் மைந்த. 4

அலைகள் விழுந்து அழிவது போலாம்
தலைகள் வணங்கின் பாவம் ஒழியும்
கடலைச் சுட்டும் குகையின் கனலென்
இதயத் தாமரை இருத்தி வாழிய. 5

கந்தன் ஏறிய கந்தமா மலையில்
வந்து ஏறியே வணங்கும் பக்தன்
கைலாஸ மேறிய புண்யம் பெறுவான்
கனியாய் கூறிய அறுமுகன் வாழிய. 6

பெருங்கடல் கரையில் பெரும்பவம் அழிக்கும்
பெருமுனி நோற்கும் பெருமண மலையில்
குகையுள் வசிக்கும் தன்னொளி வசந்தன்
குறைகள் நசிக்கும் குகனே போற்றி. 7

பொன்வீடு வசித்து முறையீடு தீர்த்து
மணவீசு மலர்நிறை மாணிக்க மஞ்சத்து
ஆயிரம் ஞாயிற்று அருளொளி வீசும்
அறுவர் வளர்த்த அமரேச போற்றி. 8

அன்னம் சூழ்ந்து செந்நிறம் பூண்டு
அகத்தை அள்ளும் அடிமலர் அழக
வாழ்கடல் வாதனை என்மன வண்டு
சூழ்ந்துநின் மலரடி மொய்ப்பதில் மகிழ்க. 9

பொன்னால் புனைந்த ஆடைகள் தரித்து
கிங்கிங் கிணிகிணி சலங்கை இசைக்க
உண்மை வாய்ந்த ஞானியர் போற்றும்
திண்மை இடையோன் கந்தா வாழிய. 10

வேடுவர் பெண்ணை சேர்த்து அணைத்து
மடுவில் பூசிய சாந்து சுமந்த
செம்மார் வேலா தாரகன் காலா
அன்பர் ஆசை தீர்க்கும் நேசா. 11

துதிக்கா பிரும்மனை சிறையில் அடைத்தாய்
துதிக்கை விலங்கின் திமிரை துடைத்தாய்
மதிக்கா பதுமன் அரக்கர் புடைத்தாய்
மதித்தே துதித்தேன் பதினிரு புயத்தாய். 12

கறைநறு திலகக் கதிரறு முகத்து
குறையொரு நிலவு ஒப்பில எண்ணில்
கறையறு முகத்து உவமை கூறிட
அறுமதி இலவே குறைமதி உளதே. 13

நின்முக முறுவல் மலருறு அன்னம்
நின்கடைப் பார்வை மலர்மொய் வண்டு
நின்இதழ் உமிழ்நீர் மலர்பொழி அமுதம்
நின்அறு முகமும் தாமரை மலரே. 14

விரிந்து அகன்று செவிவரை நீண்டு
சுரக்கும் கருணை பன்னிரு கண்ணா
அதனுள் ஒருகண் கடைநோக்குப் பார்வை
என்மீது படர குறையென நினக்கு? 15

'அங்கம் உதித்த அருமைப் புதல்வ'
பொங்கும் உவகையில் அரனார் அணைத்து
உலகின் முதல்வன் உச்சி முகர்ந்த
உன்னறு சென்னிக்கு என்னுடை வணக்கம். 16

மார்பில் ரத்தின மாலை ஒளிரும்
காதணி அசைவால் கன்னமும் ஒளிரும்
மஞ்சள் உடுத்தி மயக்கும் வேலொடு
என்புறத்தில் என்றும் சிவக்குமரன் தங்குக. 17

சக்தியின் மடியினில் அமர்ந்திடு போதினில்
சங்கரர் அன்புடன் கரத்தை நீட்டிட
தாவியே பாய்ந்து தழுவியே மகிழும்
குழந்தைக் கடவுள் குமரா போற்றி. 18

குமரா மைந்தா குகனே கந்தா
தலைவா வேலா மயில் வாகனனே
புலிந்தன் மருகா துயர்துடைப் போனே
தாரகன் காலா காப்பாய் என்னை. 19

பொறிகள் தளர்ந்து உணர்வும் அகன்று
பீழை பொழிந்து பயத்தால் நடுங்கி
புறப்படு நிலையில் சடுதியில் தோன்றி
குகனே தயாளா காப்பாய் என்னை. 20

காலன் தூதுவர் கடிந்தெனை அதட்டி
கட்டியும் வெட்டியும் துயர்தரு வேளையில்
கருணை மயிலில் விரைந்தே வந்து
கரத்தில் வேலொடு காப்பாய் என்னை. 21

உன்னடி கிடந்து உன்னைத் துதித்து
உன்னால் மகிழும் அடியேன் நானும்
அந்திமக் காலம் அசைவற்ற வேளை
அலட்சிய மின்றிக் காப்பாய் என்னை. 22

அண்டம் ஆயிரம் ஆண்ட சூரனும்
தாரகன் வக்தரன் சிங்கனும் கொன்றாய்
வான்மன மேகமோகம் வதைப்பாய் இல்லை
செய்வதும் என்ன? செல்வதும் எங்கு? 23

அடியேன் என்றும் துக்கச் சுமையோன்
அன்பர் காக்கும் உனையன்றி நாடேன்
துன்பம் கொடுக்கும் உன்னன்பு கெடுக்கும்
மனநோய் களைவாய் சக்தியின் மைந்தா. 24

குஷ்டம் க்ஷயம் வலிப்பு ஜுரமும்
கடுப்பு பைத்யம் பலவித நோய்களும்
பைசாச கணங்களும் பயந்தோ டும்மே
பன்னீர் இலையில் உன்னீறு பார்த்திட. 25

கந்தனைக் கண்டு கந்தனைக் கேட்டு
கந்தன் புகழை நாவால் ஓதி
கந்தன் திருவடி கரத்தால் துதித்து
எந்தன் அங்கம் உனக்காய் இருக்க. 26

முனிவர் தேவர் பக்தர் விருப்பமே
முடிக்கும் தெய்வம் எல்லா விடத்தும்
கடையனைக் கூடக்கடைத் தேற்றும் தெய்வம்
கந்தனை யன்றி அறியேன் அறியேன். 27

மனைவி மக்கள் சுற்றமும் நட்பும்
மற்ற ஆணும் பெண்ணும் அனைவரும்
உன்னைப் போற்றிட வணங்கிட துதித்திட
நினைப்பவர் ஆகிட அருள்வாய் குமரா. 28

கெடுசெய் மிருகம் புள்ளினம் மற்றும்
கொடுமை நோய்கள் புன்மைகள் வந்தால்
கைவேல் கொண்டு உடனே துரத்திடு
கிரௌஞ்சம் துளைத்த கூர்வடி வேலா. 29

தாயும் தந்தையும் தன்சேய் பொறுப்பர்
நீயும் அதுகொள் தேவசேனைத் தலைவா
நானொரு குழந்தை நீயுலகின் தகப்பன்
என்பிழை பொறுத்து அருள்வாய் ஈசா. 30

மயிலும் போற்றி வேலும் போற்றி
கடாவும் போற்றி சேவலும் போற்றி
கடலும் போற்றி செந்தூர் போற்றி
மீண்டும் போற்றி கந்தப் பெருமானே. 31

ஆனந்தன் வாழ்க அருளோன் வாழ்க
புகழோன் வாழ்க வடிவோன் வாழ்க
கடலோன் வாழ்க உறவோன் வாழ்க
முக்திதரு முதல்வன் மைந்தா வாழ்க. 32

புஜங்கம் என்னும் தோத்திரம் இதனை
பக்தியால் படித்தோர் பயனாய் பெறுவர்
நற்றுணை மக்கள் பொருளும் வாழ்வும்
முருகன் அருளால் முக்தியும் முடிவில். 33

சிவமயம்

## நூலாசிரியர் குறிப்பு

பத்மன் என்ற பெயரில் பல ஆண்டுகளாக எழுதிவரும் நா. அனந்த பத்மநாபன், கலைஞர் செய்திகள் தொலைக் காட்சியின் இன்புட் எடிட்டர்களில் ஒருவர். 'வணிகம் வசப்படும்' நிகழ்ச்சியின் தொகுப்பாளர். இதற்கு முன்னர் ஜெயா தொலைக்காட்சியில் 4 ஆண்டுகளும் சன் நியூஸ் தொலைக்காட்சியில் 4 ஆண்டுகளும், தினமணி நாளிதழில் 10 ஆண்டுகளும் பணியாற்றியவர். தினமணியின் இணைப்பாக வெளிவந்த வணிகமணி பகுதியின் பொறுப்பாசிரியராகவும், சிறிதுகாலம் ஆன்மிகமணியின் பொறுப்பாசிரியராகவும் இருந்துள்ளார். ஆறாம்திணை/ தமிழ் சென்னை ஆன்லைன் இணையதளத்தில் பிசினெஸ் எடிட்டராகப் பணியாற்றியுள்ளார். பத்மன், நாபன், கிரிஹர், பிரக்ஞன் ஆகிய புனைபெயர்களில் பல கட்டுரைகளையும், பத்மன் என்ற பெயரில் கவிதைகள் மற்றும் கதைகளையும் படைத்துள்ளார். 2005-ம் ஆண்டில் இதழியல் மற்றும் செய்தித்தொடர்பு குறித்து இவர் எழுதிய முதல் நூலான 'மூன்றாவது கண்', அந்த ஆண்டுக்கான, தமிழக அரசின் சிறந்த நூலுக்கான பரிசை வென்றுள்ளது. 'திக்கெட்டும் திருமுருகன்' (விகடன் பிரசுரம்), ஆண்டவன் மறுப்பும் ஆன்மீகமே ! (விகடன்)'அறுபடை அந்தாதி' ஆகிய நூல்களையும் இவர் படைத்துள்ளார்.

நூலாசிரியர் முகவரி:
பத்மன் (நா. அனந்த பத்மநாபன்),
BG1,மாஸ் கேஸில்,
46, திரௌபதி அம்மன் கோவில் தெரு,
உள்ளகரம், சென்னை – 600 091.
தொலைபேசி : 044-65349635
செல்பேசி : 9962584170, 9941890141
மின்னஞ்சல் முகவரி:
naban1967@rediffmail.com

In memory of

Poojya Shri.K.S.Venkatakrishnan

& (late) srimathi. Seetha Lakshmi



By

Shankara krishnan@Babu

Ernakulam